30th October 1958]

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த சிகிச்சை முறைக்கு வழி காட்டியாக இருப்பதற்கு சட்டசபை அங்கத்தினர்கள் இதற்கு வழிகாட்டியாக இருக்க கனம் அமைச்சர் அவர்கள் இதற்கு ஏற்பாடு செய்ய முடியுமா ? அப்படிச் செய்து காட்டினால் அது பொது மக்களுக்கு வழி காட்டியாக இருக்கும் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் அறிவாரா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது இருக்கிற ஏற்பாடுகளின்படி கனம் அங்கத்தினர்கள் தாராளமாக பிரயோசனப் படுத்திக் கொள்ளலாம்.

SRI S. M. ANNAMALAI : இப்படிப்பட்ட ரண சிகிச்சையை ஆண்கள் செய்துகொள்ளுவதால், அப்படிப்பட்ட சிகிச்சையை பெண்கள் செய்து கொள்ளாமல் இருப்பதாலும், ஆண்கள் இந்த சிகிச்சை செய்துகொண்ட பிறகும் பெண்களுக்குப் பிரசவம் ஏற்படுகிறது. அதன் காரணமாக சில தகராறுகள் ஏற்படுகின்றன. பெரிய தகராறுகள் கூட ஏற்படுகின்றன. இப்படிப்பட்ட கோளாறுகள் எதனால் ஏற்படுகின்றன என்பதில் கவனம் செலுத்த முடியுமா ? அதற்கு வேண்டிய நடவடிக்கைகளையும் அரசாங்கம் எடுத்துக்கொள்ளுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : இந்தக் கேள்வி எப்படி எழும் என்பது தெரியவில்லை.

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படி என்ன நேர்ந்தாலும் அது சிகிச்சையால் நடந்த கோளாறு அல்ல. வேறுவிதமான கோளாறுகளினால் அவைகள் நடைபெறுகின்றன.

*Teachers in the Harijan Welfare Schools*

* 711 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா ஹரிஜன நல பள்ளிகளில் வேலை செய்யும் ஆசிரியர்களின் எண்ணிக்கை என்ன ?

(ஆ) இவர்களில் காயமானவர்கள் (Permanent) எத்தனை பேர் ?

(இ) அவர்களில் வருடாவருடம் உயர்வு சம்பளம் (Increment) பெறுபவர்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) 283.

(*b*) 152.

(*c*) 283.

SRI M. C. MUTHUKUMARASWAMY : மேற்படி பள்ளிகளில் ஏறக்குறைய 107-க்கு அதிகமானவர்கள் வேலை செய்கின்றவர்கள் இருந்தும் கூட இன்னும் அவர்கள் பர்மனெண்ட் செய்யப்படாமல் இருக்கிறார்கள். அதோடு கூட அவர்களுக்கு சரியான காலத்தில் இன்க்கிரிமெண்ட் கிடைக்காமல் சில புகார்களும் இருந்து கொண்டிருக்கின்றன. இந்த இரண்டு புகார்களையும் நீக்குவதற்கு கனம் மந்திரி அவர்கள் உடனடியாக நடவடிக்கை எடுப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது இருக்கிற ஆசிரியர்களில் 152 பேர்களை பர்மனெண்ட்டாக ஆக்கப்பட்டிருக்கிறது. இன்க்கிரிமெண்ட் விஷயமாக கனம் அங்கத்தினர் எழுத்து மூலமாக எழுதிக் கொடுத்தால் அதைப்பற்றி விசாரிக்கிறேன்.

MR. SPEAKER : கேள்வி எண் 712-ஐக் கேட்ட கனம் அங்கத்தினர் சபையில் இல்லாததால் கேள்வியும் பதிலும் சட்டசபை நடவடிக்கையில் அச்சடிக்கப்படும்.